குருவானசாஸ்திரந்தா னைஞ்ஞூறும்பாரு
கொட்டினேன்கருவையெல்லா மிந்தநூலி
லுருவானகுருத்தேட வேண்டாம்நீயும்
உத்தமனேசாஸ்திரந்தான் குருநூலாகும்
திருவானமாதுவந்த நிர்த்தஞ்செய்வாள்
செகஜாலங்கூத்தைவிட்டுத் தெளிந்தாலும்
கருவானசாஸ்திரத்தைப் பார்க்கும்போது
காற்றிருப்பானுரோமனென்றுங் கண்டுகொள்ளே. 175

இரசசெந்தூரம்.

கொள்ளவேகோழிமுட்டைபத்தான் சோதித்தாக்காற்
குருவென்றிரசந்தான் தியங்கிநிற்கும்
விள்ளவேயதையெடுத்துச் சொல்லக்கேளும்
வெண்மையாங்குகையில்வைத்து யுருக்கிப்பாரு
மள்ளவேயுருகியது மணிபோல்நிற்கும்
வப்பனேயதையெடுத்துச் சொல்லக்கேளுங்
கள்ளமென்றுயெண்ணாதே சொன்னமையா
கண்டிடைக்குச்சரிகூட்டி யுருக்கிடாயே. 176

உருக்கியேசெந்தூர மாகச்சொல்லவா
முத்தமனேசேர்ந்தியது நாலத்தொன்று
தருக்கியேதாளகந்தான் மூணத்தொண்ணூத்
தான்கூட்டிக்குதம்பைசார் தனைவிட்டாட்டி
முருக்கிலைசார்முச்சாம மறைத்துக்கொண்டு
முதிராமன்மெழுகுபோல்வட்டுப்பண்ணி
யருக்கியகலில்வைத்துப் புடத்தைப்போடு
யாத்தாட்கும்வடிகனுக்கும் பூசைபண்ணே. 177

குதம்பைகூத்துங்குதம்பை.

பண்ணியேசெந்தூரம் பணங்காலுண்ணும்
பரக்குமேநோயெல்லா மண்டலத்தி
லெண்ணியேகாசித்தி யென்னசொல்வேன்
யேழையுஞ்சொல்லிவிட்டே னைஞ்ஞூற்றுக்குஞ்
புண்ணியமேசெய்தவர்க்கு மின்னூற்கிட்டும்
போக்கோடேகருக்களெல்லாம் நன்றாய்த்தோணுங்
கண்ணிலேகண்டபொருள் தன்னைப்போல
காட்டுமடாகருக்கண்முறை வாதந்தானே. 178

தானென்றசெந்தூரம் வெள்ளிநாற்றில்
 தாக்கிடவேமாத்தென்ன வெட்டுமொரு
மூன்றென்ற*குடவனிலே பத்துக்கொன்று
 முத்தமனேகொடுத்திடவே யாறுமாத்தா
மேனென்றசாத்திரங்கள் மெத்தவுண்டு
 யிதமாகநான்பார்த்தப் படியேசொன்னேன்
தேனென்றயமிர்தமடா யிந்தநூலு
 செப்பினேன்சாத்திரத்தில் தெளிந்துநானே.

* குடவன் - பித்தளை.

வெடியுப்புச் சுண்ணம்.

தெளிந்துமேசொல்லுகிறே னின்னங்கேளு
 திறமானவெடியுப்பு செயநீர்தன்னை
னெழிந்தவொருவெடியுப்பு யைந்தாங்காச்சன்
 மோகமிதுசொல்லுகிறேன் முப்பூவின்போக்கு
கனிந்தவொருவுப்பென்று மிதற்குப்பேரு
 கம்பியுப்புவெடியென்று மிதற்கும்பேரு
மொழிந்தவொருயடியென்று மிதற்கும்பேரு
 முத்தமனேயிதின்பெருமை யுரைக்கிறேனே.

உரைக்கவேகம்பியுப்புபலமோபத்து
 உத்தமனேவயச்சட்டிக் குள்ளேவைத்து
நிறைக்கவே*சுணங்கனுட வென்மலமும்மூன்று
 நேராகநரிசியது பலமுமொன்று
சிறக்கவே†சீனமொன்று ‡காறந்தானுந்
 திரம்போலவெண்கார மிவைவொன்றிந்தாக்
அறைக்கவேவகைபொன்று பலமைந்தாங்கூட்டி
 யப்பனேசல்வமதிற் பொடியாய்ப்பண்ணே.

* சுணங்கன் - நாய் † காறம்-முப்புச்சுண்ணம்.
‡ சீனம்-படிகாரம்.

பண்ணவேவயச்சட்டி யடுப்பில்வைத்து
 பாங்குபெறவுப்பதனை யதின்மேற்கொட்டி
கண்ணவேயடுப்பேற்றி யப்புருகமட்டுங்
 கசிந்துமேயுருகையிலே செப்பக்கேளும்
முன்னமேபொடித்தவொரு தூளையப்பா
 முறைமுறையாய்த்தூவிவிடு புகைபடங்கமட்டுந்
சொன்னவொருபொடியெல்லா மானபின்புந்
 தப்பறவாய்தானெடுத்து யப்பால்வையே.

சாரம்.

அப்பாலேவைத்ததொரு வுப்பைமைந்தா
வறைக்கவேகல்வமதி லிட்டுக்கொண்டு
வெப்பானகாரமதை சொல்லக்கேளு
வெண்மையென்றநிகோழிமலங் கொண்டுவந்து
தப்பாதேயண்டத்தின் வெண்கருவைவிட்டு
தானரைப்பாயிருசாம மெழுகாய்ப்போகும்
முப்பானசாரமது *சங்கிபூட்ட
வுத்தமனே*புவரில்வைத்து புடத்தைப்போடே. 183

* அங்கிகவசஞ்செய்து * புவற்கலர்மண்ணு.

போடவேயைந்தெருவிற் புடத்தைப்போடு
பொங்காமல்வெடியாமன் னிற்கும்பாரு
நாடவேயெடுத்ததனை நிறுத்துக்கொண்டு
நாட்டுவாய்வெடிதனக்கு நாலத்தொண்ணு
தேடவேபோகாது விந்தநீரை
திறமைபெறசொல்லிவிட்டே னிந்தநூலில்
கூடவே*வெலியலாம் பாலைவார்த்து
குமறவேதானரைத்துப் பிங்கானிலப்பே. 184

* எலியால்காட்டாமணக்கு.

அப்பியேபனியில்வைக்க செயநீராகும்
அப்பனேபிங்கானி லெடுத்துக்கொண்டு
தப்பியேபோகாது சரக்கெல்லாந்தான்
தட்டுண்டுகட்டுமடா ஜெயநீராலே
வொப்பியேபாஷாண மொன்பதுந்தான்
ஒடுங்குமடாயிதினுடைய வாடைகண்டா
லப்பியேயிதைவிட்டு இன்னமொன்று
யறுவகையின்மைந்தனே செயநீர்கேளே. 185

ஆறுவகைசெயநீர்.

கேளடாவெடியுப்பு பலமோபத்து
கிருபைபெறவேணுமென்று வயச்சட்டிலிட்டு
தேளடாகொட்டுதல்போல் சுண்ணமாக
செப்புகிறேன்*சுதேசியுடகபாலம்வாங்கி
கோளடாவாராம விருந்துக்கொண்டு
கூட்டுவாய்பலமொன்று வின்னங்கேளு
நாளடாதுருசோடு சீனக்காரம்
நலமானவெண்காரம் பூனீர்கூட்டே. 186

* தேசிகபாலம்-குதறமட்டை.

கூட்டியேநவாச்சாரம் வகையொன்றுக்கு
கூறுவேன்பலமொன்று பொடியாய்ச்செய்து
தாட்டியேமுன்பொடியோ டொக்கக்கூட்டி
யப்பனேவெடியுப்பு வருகும்போது
ஆட்டியேகொஞ்சமாம் தொண்டுக்கிண்டி
யுத்தமனேயுட்கொண்டு வாங்கும்பாரு
வாட்டியேபொடியெல்லாஞ் சென்றபின்பு
வழித்துமேகல்வமதி லிட்டுக்கேளே. 187

கேளடாநவாச்சாரம் பச்சையாக
கெட்டியாய்பலன்மருந்து யெடுத்துக்கொண்டு
நாளடாவெடியுப்பு சுண்ணத்தோடே
நன்றாகசேர்த்தரைப்பா யெருக்கன்பாலால்
சூளடாயிருசாம மறைத்துக்கொண்டு
துப்பறவாய்பீங்கானி லப்பியேதான்
வாளடாபனியில்வைக்க செயநீராகும்
மைந்தனேகுப்பிதனி லடைத்திடாயே. 188

அடைத்துமேவடுகனுக்குப் பூசைபண்ணி
யாத்தாளேதியானித்து சொல்லக்கேளும்
படைத்துமேயவள்பதத்தி லர்ச்சித்தேதாம்
பாங்குபெறகுப்பியைநீ யப்பால்வாங்கி
சடைத்துமேபோகாதோ யென்தாய்ப்பூசை
சதாநித்தியவள்பதத்தை தொண்டுபண்ணு
நடத்துமேயவளுடைய கிருபைதானும்
நாதாக்கணமறப்பையெல்லாம் நீக்குவாளே. 189

தாளகச்சுண்ணம்.

நீக்கவேமுன்னுரைத்த செயநீர்தன்னை
நீயெடுத்துச்சரக்குகளிற் றெய்த்துப்போடு
யாக்கவேகட்டுண்டு யிறுகிப்போகு
மரசராவாகமதில் எல்லாஞ்சொல்வேன்
சேர்க்கவேதாளகத்தை செயநீர்தன்னில்
திறமையாய்தான்துவைத்து ரவியிற்போடு
காற்கவேமூணுநா ளானபின்பு
காக்கிணத்தினிலயறைத்து கவசய்போடே. 190

கெவுரிக்கட்டு.

போடவேசுண்ணமது வென்னசொல்வேன்
பொலிந்துயேநீறுமடா தாளகந்தான்
நாடவேதாளகச் சுண்ணந்தன்னை
நலமாகத்தாவெடுத்துச் சொல்லக்கேளும்
தேடவேகெவுரியைத்தான் ஜெயநீராலே
தீர்க்கமாய்தான் துவைந்து ரவியிற்போட்டுப்
பாடவேசாளகத்தின் சுண்ணத்தாலே
பலமாகக்கவசமிட்டுப் புடத்தைப்போடே 191

இலிங்கக்கட்டுச்சிந்தூரம்.

புடத்திலேகெவுரியுந்தான் கட்டிப்போகும்
பொருமிடேசுண்ணும்பா யிருக்கும்பாரு
திடத்திலேசுண்ணமதை யெடுத்துக்கொண்டு
திறமையாயிலிங்கமதுக் கங்கியூட்டி
* விடத்தலையின்வேரரைத்து யதின்மேல்காட்டி
விருதுபெறக்கஞ்செருவிற் புடத்தைப்போடு
தடத்திலேயதைப்போற் பாகையுண்டோ
தான்கட்டிப்போகுமடா லிங்கந்தானே. 192

* விடத்தலை விடத்தாறி.

தானென்றலிங்கமது கட்டிப்போகுந்
தன்னையெடுத்துக்கல்வத்தி லிட்டுக்கொண்டு
மூனென்ற * நாதமுடன் * வெடியுங்கூட்டி
முசந்தியாந்தாளகமும் * கெந்திகூட்டி
மானென்றதங்கமடா ரேக்குதானு
மைந்தனேயொன்று பலங்காலரைத்
தேனென்றகட்டியதோர் லிங்கமென்று
சேரவேகல்வத்தி லிட்டுக்கேளே. 193

* நாதம் அரசம் * வெடி வெடியுப்பு

* கெந்தி * கந்தம்

கேளடாயாறுநீர் தன்னாலாட்டிக்
கெட்டியாய்த்திட்டதுபோல்வட்டுபண்ணி
வாளடாமூன்றெருவிற் புடத்தைப்போடு
மார்க்கமாய்க்கட்டியது நிற்கும்பாரு
சூளடாமறுபடியுங் கல்வத்திட்டுத்
துடியானகந்தகத்தை யதிற்குட்பாதி

கேளடாவாராமற் கூட்டிக்கொண்டு
கொடுமைபெறப்பழஞ்சாற்று லாட்டித்தீரே. 194

* பழச்சாறு-எலுமிச்சங்கனிரசம்.

தீரவேரவிதனிற் காயப்போடு
திறமையாய்ப்பொடிபண்ணிக் * குப்பிக்கேற்றி
வாறவே * வாலுகையில் * தாளிவைத்து
மணல்கட்டுக்குப்பியதி னுள்ளேவைத்து
ஆறவேயபனிரண்டு சாமந்தானும்
அப்பனேமுன்போற் றெறித்தப்பின்பு
சேறவேமூன்றுநாட் குப்பிவாங்கித்
தேவியைநீபூசித் திடைத்துப்பாரே. 195

* வாலுகை-அடுப்பு * தாளி-மிடா.

பாற்கவேசிந்தூர மென்னசொல்வேன்
பவளம்போலிருக்குமடா * தளத்தலேநான்
ஏற்கவேபணவிடைதாந் தேனிற்கொள்ள
என்னசொல்வேன்காயமது யிறுகிப்போகுங்
கார்க்கவேவாசிதா னடக்கும்பாரு
கண்கொள்ளச்சோதியது வேகமெத்த
சேர்க்கவேகுதிரையைத்தான் பூட்டிக்கொண்டு
திசைகளெட்டுவெல்லுமிது திறமிதாமே 196

0 தளம்-அடியில்.

திரமாகசிந்தூரம் வெள்ளிநூற்றிற்
செறுத்திவிடுவிராகனிடை யொன்றுவீத
முரமானமாற்றதுவு மெட்டுமாகு
மோகோகோவிதன்பெருமையுரைக்கப்போகுஞ்
சிரமான 0 வாகாசகம்பியாலே
செயிக்குமடாநவலோக மெல்லாந்தங்கம்
பரமானபராபரத்தின் வித்துவாகும்
பார்தனிலேவிள்ளாதே யெவர்க்குந்தானே. 19'

0 ஆகாசகம்பி-கம்பியுப்பு

ஆர்க்குமேசொல்லாதே செயநீர்போக்கை
யரனெனக்குச்சத்தியமாய்ச் சொன்னவித்தை
சேர்க்கையாய்ச்சித்தரெல்லாங் கூடிக்கொண்டு
சிரமாகவருவகைநீர் தன்னையப்பா

பார்க்கவேயவரவர்கள் மறைத்துச்சொன்னார்
  பாவம்வருமென்றுசொல்லி மனதிலெண்ணிக்
கார்க்கவேவேணுமென்று கிருபையாகிக்
  கட்டினேன்சாஸ்திரத்தைக் கருதிப்பாரே. 198

கருதியேசித்தரெல்லாங் கூட்டிக்கொண்டு
  காட்டினார்சாஸ்திரங்க ளனேகங்கோடி
உறுதியாய்வாசமதா செய்யச்சொல்லி
  யொளித்தார்கள்கருக்களெல்லா மொலித்துவைத்தார்
* பருதி*மதியுப்புதனை மனதுக்கேற்ற
  படிசொல்லிவைத்ததினால் விபரமில்லை
அறுதியாய்ச்சொல்லிவைத்தார் பச்சையாக
  அப்பனேயிதையறிந்து வாதம்பாரே. 199

* பருதி சூரியன் * மதி சந்திரன்.

வாதமென்னகொஞ்சத் ற் கிட்டுமோசொல்
  மகத்தானபெரியோர்க்குத் தொண்டுபண்ணி
நாதமென்னநாகத்தின் விபரந்தன்னை
  நாதாக்கண்பதமறிந்து விபரங்கேளும்
வேதமென்னவந்தரத்தின் பொருளுந்தோணும்
  வேதாந்தசாஸ்திரத்தி னறிவுகாணும்
பாதமன்னவுப்பதனை யறியவேணும்
  பரத்தினுடபிட்டையிலே பணந்தானில்லே. 200

நில்லென்றுயானுரைத்த சாஸ்திரத்தில்
  நினைவாகமனதில்வைத்துக் குருவென்றெண்ணி
சொல்லென்றுதியானித்து பூசைச்செய்யச்
  சோதித்துவுன்மனதிற் சொல்லும்பாரு
கல்லென்றுகரமுத லுருகிப்போகுங்
  கருத்தில்வைத்துயென்னாலைப் பார்த்தபேர்க்குங்
கொல்லென்றுகூற்றுவனு மொதுங்கிப்போவான்
  கொடியதொருசமாதியிலே யிருந்துபாரே. 201

பூநாகச்சத்து.

இருந்துமேபூநாகச் சத்தைக்கேளு
  மென்னசொல்வேன் செம்மணலிற் * பூநாகந்தான்
பருத்துமேபெரிதாக விருக்கும்பாரு
  பட்டவிடம்மதியைப்போற் சோதிகாணும்

நருத்துமேயைந்துபல மெடுத்துக்கொண்டு
நேராவின்பால்தனிலே போட்டாயானால்
வெருத்துமேமண்ணையெல்லாங் கக்கிப்போடும்
வேற்படவேபூநாகம் பிழிந்துவாங்கே 202

* பூநாகம்-நாக்குப்பூச்சி * மதி-செம்பு அதேசந்திரன்.

வாங்கியேகோவையிலேச் சாற்றி லூட்டி
மைந்தனே * ரவிமுகத்திற் காயப்போட்டு
நீங்கியேகருப்பாக விருக்கும்பாரு
நினைவாகக்காய்ந்தபின் யெடுத்துக்கொண்டு
தாங்கியேகல்வமதிலிட்டுநீயுஞ்
சார்வான * சூடனது லங்காற்போடு
ஓங்கியேமண்செய்து புடத்தைப்போடு
உத்தமனேயிருபத்திற் புடத்திற்காணே. 203

* இரவி-சூரியன் * சூடன்-கற்பூரம்.

காணவேபுடமாறி யெடுத்துப்பார்க்க
கருப்பென்றநிறம்போகும் வெண்மையாகுந்
தோணவேபற்பத்தை யெடுத்துக்கொண்டு
சொல்லுவேன்சரக்குவகை யின்னங்கேளும்
வேணவேவெண்காரம்பல மரைதான்போட்டு
விருதுபோற்றுனரைப்பாய் காடிவார்த்து
ஊணவேவில்லையாய்த்தான் பிடித்துக்கொண்டு
வுத்தமனேபத்தெருவிற் புடத்தைப்போடே. 204

போடவேபற்பந்தா னெடுத்துக்கொண்டு
புகழ்பெறவேகாடிதனி லூறவைத்து
நாடவேநாலாநாட்டெளிவிறுத்து
நாட்டுவாய் * சூதமது * களஞ்சியாது
ஓட்டவேவிட்டுநீ கையாற்றேய்த்து
உத்தமனேரசமதுதான் செம்பிற்றுக்கு
கூடவேரசமெல்லா மொன்றாய்த்தேய்த்துங்
கூட்டியேகெட்டியா யுண்டைசெய்யே 205

0 சூதம் இரசம் 0 கழஞ்சு-நாற்பது குன்றிடை.

செய்தவுண்டை 0 குகையில்வைத்துக் காரங்கூட்டித்
தீர்க்கமாயுருக்கிப்பார் செம்புமாகுந்

கொய்தசெம்பைத்தானெடுத் துருக்கிப்பாரு
கோடிரவிபோலிருக்குஞ் சத்துவேகந்
தொய்தமென்றபூநாகச் செம்பையையா
சுருக்கமாய்ச்சொல்லுகிறேன் வேதைமார்க்கம்
வெய்தமென்றகுளிகைக்குக் கொடுத்தாயானல்
வேகமதாயதிவேகம் பசியுண்டாமே. 206

* குகை-மூசை * காரம்-செயநீர்.

உண்டானசெம்பிடைக்குத் தங்கங்கூட்டி
யுத்தமனேகுகைதனி லுருக்கும்போது
பண்டானநாகமடா நாலத்தொன்று
பருங்கண்ணேதானொடுங்கிக் கூட்டியீவாய்
குண்டானகலகமதி லுருக்கிச்சாய்ப்பாய்
கொட்டவேதூளாக நொருங்கும்பாரு
பண்டானதாளகமுங் கெவுரிகூட்டி
பண்பாககல்வமதி லரைத்திடாயே. 207

அரைக்கவேசெவ்வல்லி பூச்சார்விட்டு
அப்பனேநாற்சாம மரைத்தபின்பு
யுரைக்கவேரவிதனிற் காயப்போடு
உத்தமனேபொடிபண்ணிக் * குப்பிக்கேற்றித்
திரைக்கவேவாலுகையின்மேலேவைத்து
தீயெரிப்பாய்பனிரண்டு சாமந்தானு
மறைக்கவேயில்லையடா சிந்தூரத்தை
மைந்தனேராக்கால மாறப்போடே 207

* கும்பி-புட்டி.

போடவேநாலாநாள் குப்பிவாங்கிப்
பூரணியைப்பூசித்து தியானஞ்செய்து
ஆடவேவேணுமென்றால் சொல்லக்கேளு
அப்பனேகுப்பித்தா னுடைத்துப்பாரு
நாடவேசெம்முருக்கம் பூப்போலாகும்
நலமானசிந்தூரங் * குன்றியுண்ணு
தேடவேயனுபானந் தேனிலூட்டிச்
சிவசிவாயுன்தேக மருணமாமே. 209

அருணமென்றசிந்தூரம் வெள்ளிநூற்றில்
அளித்திடவேமாற்றென்ன பனிரண்டாகும்

தருணமென்றவெண் தாயைப் பூசைபண்ணச்
சகலகலைசித்தெல்லாஞ் சொல்வாள்தாயார்
கருணமென்றபஞ்சீகரண பூதத்தாலே
காட்டுவாளண்டபிண்டமெல்லாந்
மருணமென்றநாலைவிட்ட தோஷத்தாலே
வந்ததடாபிரபஞ்ச மாயைதானே.

தானென்றபூநாகச் சிந்தூரத்தைச்
சாற்றினேன்சித்தருட சபையில்நின்று
கோனென்றசித்தரெல்லாங் கூட்டிக்கொண்டு
கொழுப்படாபாடினது வென்றுகேட்டார்
தேனென்றதக்ஷிணத்திற் பொதிகைநாதன்
சின்மயத்தினுத்தரவாற் றெளிந்துசொன்னேன்
மானென்றவென்குருவும புசண்டர்சொல்லை
வசனித்தேனனூற்றில் மகிழ்ந்துகாணே.

இந்திரகோபச்செப்பு.

காண்பதென்னன்னூற்றி லின்னங்கேளு
கனமானவிந்திரமாங் கோபச்செம்பை
ஆண்பதென்னபொருளென்று மெண்ணிடாதே
யாத்தாளுமப்பனுமே யணைந்தநாதம்
தூண்பதென்னமின்னலுக்குள் * சோமனாலே
துப்பரவாய்ரவிபாலே சாந்தியாக்கூ
டாண்பதென்னபூமியிலே மெத்தவுண்டு
பார்த்துநீகொண்டுவந்து சொல்லக்கேளே.

* சோமன்-சந்திரன்-அதேசெப்பு.

கேளடாமயிமதுதா னிருபத்தஞ்சு
கிருபைபெறக்கல்வத்தி லிட்டுக்கொண்டு
நாளடாதுரிசியது பலந்தானொன்று
நலமானவெண்காரம் பலந்தான்மூன்று
வாளடா * வெடியுப்பு பலமோரண்டு
வளமானவீரமது பலமுமொன்று
சூளடா * சூடோரியது பலமும்ரண்டு
சொல்லுவேனிவையெல்லாங் கல்வத்திட்டே.

* வெடியுப்பு-பொட்டிலுப்பு * சூடோரி

மாத்திரை.

இட்டுமேபூநாகப் பலந்தானொன்று
இவையெல்லாமிட்டரைக்க வகையைக்கேளு

கட்டுமேயவுரியிலைச் சாற்றாற்சாமங்
கருங்கோழிரத்தமதுமூன்றுசாமம்
மொட்டுமே || யாடுதின்னாப்பாலைச்சாறு
முக்தமனே முச்சாமமரைத்துக்கொண்டு
வெட்டுமேவெள்ளாட்டு ரத்தமோடு
விழுதுபடத்தானறைப்பாய் சாமம்நாலே. 214

|| ஆடுதின்னாப்பாளை ஆடுதொடாமூலி.

நாளானவாடுதின்னாப் பாலைச்சாறும்
நாற்சாமந்தானறைத்துச் சொல்லக்கேளு
பாலானசாறுவகை யரைக்கும்போது
பற்றவேகாய்ந்தபின்பு மறுச்சார்வாரு
சேலான § வெலிபாலப்பாலைவிட்டுத்
திரள்வரைமுச்சாமந் தீர்க்கமாக
காலானகாசுபோல் வில்லைபண்ணிக்
கனத்தசொரு || குகைதனிலமுத்திடாயே. 215

§ எலியால்-கட்டாமணக்கு || குகை-மூசை.

அமத்தியேசரவலையில்வைத்துக்கொண்டு
அப்பனே துரித்தியிட்டுச் சொல்லக்கேளு
சமத்தியென்றவென்தாயைப் பூசைசெய்து
சாதகமாய்வயக்கின்னீற்றுரித்திரண்டு
செமத்தியேகரியைகன்றாய்ச் செமத்திபூது
திரளேவகரிமனியா யிறங்கும்பாரு
கழுத்தியேயேலோடு கொண்டுமூடு
கட்டாகவந்துதிர மூடிடாயே. 216

சரவலை-சரம்வைத்தூதுதல்.

ஊதியேமணிகளெல்லாம் பொருக்கிக்கொண்டு
வுத்தமனே § சறகெல்லாமமூன்றலூது
வாதிலேசர்தெல்லா மொன்றாய்ச்சேர்த்து
வப்பனே || காரமிட்டுருக்கிப்பாரு
ஏற்கவேசெம்பையினி யென்னசொல்வேன்
யினிவாணசூரியன்போற் காந்தியாகும்
பாகமாய்மதிதரித்த யீசன்செம்பை
பார்ப்பதற்குக்கண்ணுண்டோ பாருள்ளோர்க்கே. 217

சறடு-அழுக்கு || காரம்-செயநீர்.

பார்தனிலிச்செம்பைக் கண்டபோதே
பரனுனதுவசமாவார் பாருபாரு
கார்காலந்தனிற்றழைத்த விருட்சம்போலக்
காணுமடாயெத்தொழிலுங் கண்கொள்ளாது
சீர்தனிலிச்செம்பை வெள்ளிநாற்றிற்
செலுத்திநீயொன்றிடவே மாற்றென்னசொல்வேன்
சோதனைக்குமாற்றென்ன விருபத்தஞ்சு
சிரமைமெத்தத்திரமைமெத்த யின்னங்கேளே. 218

கேளடாயிச்செம்பை மதவானைக்கீய
கீர்த்திபெறக்கொடுத்தவி டென்னசொல்வேன்
வாளடாசோடசமாங் கலையுண்டாச்சு
மைந்தனேகொடுமையென்றாற் கொடியவேகம்
சூளடாயண்டத்திற் செல்லும்போது
சோதியடாரவிகோடி காந்தியாகுந்
தாளடாயிச்செம்பை வைத்துக்கொண்டு
தான்செய்யும்வகைசொல்வே னின்னங்கேளே.

இன்னமுநான்சொல்லுகிறேன் செம்பிற்போக்கை
யிலக்காகச்சொல்லிவைத்தார் சித்தரெல்லாம்
முன்னமுநான்சொன்னதொரு தொழிற்களெல்லா
முப்பூவின்கருவதற் கொவ்வாதப்பா
கன்னமுள்ளசரக்குகளைக் காட்டிக்கொள்ளுங்
கண்டவுடன்பாஷாணஞ் செத்துப்போகும்
வன்னமுள்ளட்டசித்து வசியமுண்டாம்
மைந்தனேயிதின்பெருமை யாழ்த்துவேனே. 220

வாழ்த்துவேனிச்செம்பை ¶ குகையிலிட்டு
மைந்தனேயுருகையிலே பலமதொன்று
அழுத்தமுள்ளதங்கமடா பலந்தானென்று
அப்பனேநாதமொன்று கொடுத்தாயானல்
பழுத்தவொருமூன்றின முருக்கேகொண்டு
பாங்குபெறகல்வமதி லாட்டும்போது
கொழுத்ததொருகளங்கமது யொருங்கும்பாரு
கூறுவோமிதன்பெருமை கூறுவோமே. 221

¶ குகை-ஆதேமூசை.

கூறுவேஞ்சரக்குவகை யின்னங்கேளு
கொடியதொருதாளகமுஞ் 0 சிலையுங்கந்தி
தாறவேகெவுரியோடப் பிரேகத் 0 துத்த
மப்பனே 0 வெடியுடனே 0 சூதங்கூட்டி
நீறவே 0 சூலாமலிச் சாறுதன்னால்
நிகழவேநாற்சாம மரைத்தபின்பு
ஆறவேமாந்துளிரின் சாற்றினாலே
அன்பாகவரைத்திடுவாய்சாமம்நாலே. 222

0 சிலைமனோசிலை 0 துத்தம்-பாற்துத்தம்.

0 வெடி-வெடியுப்பு.

0 சூலாமலி-முட்செவ்வந்தி.

நாலானசாமமடா வரைத்தபின்பு
நலமாகக்காய்ந்தபின் சொல்லக்கேளு
சேலானதொன்றுமில்லை செம்பருத்தமபூச்சாற்
சிறக்கவேநாற்சாம மரைத்துக்கொண்டு
மேலானரவிதனி லுலறப்போட்டு
மேன்மையாய்பொடிபண்ணிக் குப்பிக்கேற்றி
சூலானசூன்மிருந்து கற்பமாச்சு
சொல்லுவேனிதன்பெருமை சொல்லுவேனே. 223

சொல்லுவேன்வாலுகையின் மேலேவைத்து
துப்புரவேமுன்போற் பாகஞ்செய்து
வெல்லுவேன் 0 மூத்தீயின் விபரங்கேளு
வேதாந்ததீபமடா விளக்கும்நாலு
சொல்லுவேன்கமலம்போற் றீபந்தானுந்
திறமைபெறநாற்சாமந் தீர்ந்தபின்பு
அல்லுவேனானுரைக்கிறேன் மூன்றுநாளில்
அப்பனேநாற்சாமம் கோரமாமே. 224

0 மூத்தி கமலாக்கினி- கடாக்கினி-தீபாக்கினி

அகோரமென்றவக்கினிதா னுலுசாம
மப்பனேயெரித்தபின்பு சொல்லக்கேளு
வகாரமென்றசொல்லிதுக் குட்சொல்லபோமோ
மைந்தனேயிராக்கால மாரப்போட்டு
சிகாரமென்றவென்தாயார் பார்வதிபாதஞ்
சிறக்கவேபூசைபண்ணித் திறத்தைக்கேளும்
நகாரமென்றபட்டணத்திற் குடியிருந்த
நாதாந்தசத்திக்கு வாமம்வையே. 225

வாமம்வைத்துப்பூசைபண்ணிச் சொல்லக்கேளு
மார்க்கமாய்வைரவர்க்குப் பூசைசெய்து
ஓமம்வைத்துயென்குருவை யர்ச்சனைசெய்து
வுத்தமனேயென்னை நீ நினைந்துகொண்டு
காமம்வைத்தபேய்போல வலைந்திடாதே
கவடுவைத்தால்வைரவனுஞ் சாபமீவார்
சோமம்வைத்தகுருநாதன் பூசைபண்ணி
சொல்லுவேன்குப்பியை நீ யப்பால்வாங்கே 226

வாங்கியேகுப்பியை நீ யுடைத்துப்பாரு
மைந்தனேசிந்தூர மென்னசொல்வேன்
தாங்கியேயெடுத்து நீ சிமிளில்வைத்து
தாட்பாதத்திற்பூசைபண்ணிக் * குன்றியுண்ணு
தூங்கியேதிரியாதே காயச்சித்தி
சொல்லுவேன் ⁕ மண்டலத்திற் சித்தியாகு
மோங்கியேநரைகளெல்லா வண்டுபோலா
மோகோகோசோதிநிற மாகும்பாரே. 227

* குன்றி-குண்டுமணி ⁕ மண்டலம்-நாற்பதுநாள்.

இவ்வடி ஆச்சரியக்கோல்.

சோதியென்றசிந்தூர வெள்ளிதன்னிற்
சொல்லுவேனுயிரத்தி லொன்றுபோடு
மாதியென்றமாற்றதுதா னிருபதாகு
மப்பனேபச்சைவன்னங் கண்ணேகூசும்
வாதிகளேசிந்தூரஞ் செய்வீராகின்
மகத்தானசிவலோகமெல்லாந்தங்கம்
நீதியாய்ச்சொல்லிவைத்தேன் சிந்தூரத்தை
நிலைத்ததொருசித்தரெல்லா மொளித்தார்பாரே. 228

ஒளித்தாரேசித்தரெல்லாம் பேசிக்கொண்டு
ஒகோகோயிந்திரமாம் கோபச்செம்பை
யொளித்தாரேகருக்கெல்லாம் வெளிவிடாம
லொருகுழியாவெட்டிங்கே புதைத்தார்பாரு
களித்தானேயொருவருக்குந் தோணுதென்று
கபடமாயவர்மனங் கருதிக்கொண்டார்
வளித்தானேமையறனும் வகையறிந்தும்
வழிகண்டுபோர்ப்பதாற் றோணுந்தோணே. 229

தோணுதவென்றுசொல்லி விட்டிடாதே
சொற்பெரியர்நாதாக்க ளாட்டமெல்லாங்
காணுதகாணுமடா வுற்றுப்பார்த்தால்
கருவுதனைக்குருசொல்லக் காணவேணுங்
கோணுதவென்னுடைய நூலைப்பார்த்தால்
கூறுவேன்கருமறைப்பு மொன்றுமில்லை
போணுதுபிரபஞ்சத் தன்னைப்பாரார்
பேரிம்பமுத்தியிலே சேர்க்கும்பாரே. 230

சேர்க்கவேசொல்லுகிறே னின்னங்கேளு
திறமாகச்சத்திவகை ஜெயநீர்தன்னில்
பார்க்கவெடியுப்பு நாலாங்காச்சல்
பரிவாகப்பல ‖ மீர டெடுத்துக்கொண்டு
ஆர்க்கவே ¶ யயச்சட்டிதன்னிலிட்டு
அப்பனேசராவுலையில் வைத்தூறு
கார்க்கவேவுசிகொண் டுருகும்போது
கதிரனுள் § கணங்கனுட ‖ கபாலம்வாங்கே. 231

※ ரெட்டு பதினாறு.

* அயச்சட்டி - இருப்புபாண்டம்

※ கதிரவனுள்-ஆதிவாரம் ※ கணங்கன்நாய்

※ கபாலம்-மண்டை.

வாங்கியேயுவர்மண்ணிற் சிறுநீர்விட்டு
மைந்தனேகலக்கியதைத் தெளியவாங்கி
ஓங்கியேயவண்டவோ டதனையே
மொருஜாமமூறவைத் துரைக்கக்கேளு
தாங்கியேயடுப்பேற்றித் தணலைமூட்டு
தயவாகவெண்ணெய்கக்கி வெளுத்திருக்குந்
தூங்கியேதிரியாதே கபாலவோட்டைத்
திறமாகத்தான்கழுவி யுலரப்போடே. 232

போடவேரவிதனிலே காய்ந்தபின்பு
புகழுமவன்மாவாக்கி யெடுத்துக்கொண்டு
தேடவேவேண்டாங்காண் பலந்தான்மூன்று
திறமானபூரமுட னன்னசேதி
நாடவேவளையலுப்பு யிந்துப்போடு
நலமானகருப்பூரஞ் சாரஞ்சேரு

வாடவேவகையொன்று பலமொன்றாக
வப்பனே || சீனமென்று காரமிரண்டே. 233

* சீனம்-படிகாரம்.

காரம்-வெங்காரம்.

ரெண்டானவிவையெல்லாம் பொடியாய்ப்பண்ணி
நேர்ப்பானகபாலமதிற் சேர்த்துக்கொண்டு
தண்டானவெடியுப் புருகும்போகும்போது
தாக்கடாவதனையுஞ் சுண்ணமாச்சு
குண்டானவிவையெல்லாங் கொண்டபோது
கூறுவேன்வழித்துயினி கல்வத்திட்டு
பண்டானவீரமது பலந்தானேந்து
பருவமாய்க்கூடவிட் டாட்டிடுவாயே. 234

ஆட்டுவாயெலுமிச்சம் பழச்சார்தன்னா
லப்பனேயிருசாம மரைந்தபின்பு
கூட்டுவாய்மாதலையின் பழச்சாற்றாலுங்
கொடியபுளிப்பாயிருக்கு மதிறாற்சாமம்
நீட்டுவாய் || மயனம்போலானபின்பு
நேர்ப்பாகவில்லைதட்டி யுலரப்போடு
சூட்டுவாய்ரவிதனிற் காய்ந்தபின்பு
துப்பாரவாய்ப்பூநீற்றை புடத்திற்போடே. 235

* மயனம் போல் மெழுகுபோல்.

புடத்தையினிப்போடுகிற விபரங்கேளு
பூநீரையகலில்விரற்சனமேபோடு
தடத்தையினிச்சொல்வேன் மக்கணீங்கட்
டாணிடுவாய்வில்லைதனைப் பூநீர்தன்மேல்
படைத்ததொருபூநீற்றை யதன்மேல்கொட்டி
பாங்காகவேயமுத்தி யோடுமூடி
சடைத்துநீபோகாதே யொருசாணைந்திற்
றுளிடுவாய்ரவிபுட மாகும்பாரே. 236

ஆகுமடாபுடமாறி யெடுத்துக்கொண்டு
அப்பனேசாரமது பலந்தானஞ்சு
போகுமடாதிருகுகள்ளிப் பாலைவார்த்து
பொங்காமல்தானரைத்து பிங்கானிலப்பி
வேகுமடா பனியில்வைக்க ஜெயநீர்தானு
மென்சொல்வேன்வாருதிபோ லாகும்பாரு

தாருமடா ஜெயநீரைப் பீங்கானுள்ளே
 தானடைத்துதேவிமுன் வைத்திடாயே. 237

வைத்துமேபூசைசெய்து யப்பாகேளு
 வாகனசரக்குகளை தேய்த்துபோட்டால்
நைத்துமேசுத்தியது வென்னசொல்வேன்
 நலமாகசரக்குசுத்தி திறமாம்பாரு
ஏத்துமுதற்செம்புவரை காசிற்றேய்க்க
 விதமாககளிப்பற்று சுத்தியாகுஞ்
சேத்துமேசரக்குகளை கட்டுங்கட்டுந்
 தீர்க்கமடாசொர்னநிறங் கொடுக்கும்பாரே. 238

பாரேநீ * கோமியண்டங் தன்னிலேதான்
 பாராபரியாடைலமது சொல்லக்கேளு
சேரேநீவீரமுடன் பூரங்காரந்
 திறமானசீனமுடன் கௌரிச்சாரந்
தேரேநீலிங்கமுடன் வெடியுங்கந்தி
 தீர்க்கமாந்தாளகமும் நாகஞ்சூதம்
வேரேநீயெண்ணாதே வகையொன்றுக்கு
 மீறாதேபலமொன்று வீதஞ்சேரே. 239

* கோழியினண்டம்-கோழிமுட்டை.

வீதமென்னவகையெல்லாங் கல்வத்திட்டு
 வெண்மையென்றகோழியுட னண்டம்வாங்கி
நீதமென்றயண்டமது வைம்பத்தொன்று
 நிரைதிறமஞ்சளென்ற நிறமாந்தன்னை
நாதமென்றமஞ்சணிறக் கருவிணாலே
 நயம்படவேசாமம்நா லரைத்தபின்பு
குதமென்றநெல்லுபோல் வில்லைதட்டி
 துப்புறவாய்க்கலசமதி லடைத்திடாயே. 240

அடைத்துமே * பூப்புடத்திற் றைலம்வாங்கி
 யப்பனே * வாலைதனைத்தியானஞ்செய்து
படைத்துமே * வஸ்துவொடு சுத்திசெய்து
 பாலமுதுவடைபருப்பு பரமானங்க
ளடைத்துமேதென்னங்காய் மற்றவர்க்க
 முத்தளமால்புஷ்பத்தை நிறையச்சாத்தி
மடைத்தனமாய்த்திரியாதே தியானஞ்செய்து
 வந்திறங்குந்தயிலத்தை யின்னங்கேளே. 241

பூப்புடன்-குழிப்புடம் || வாலை-திராவகமிறங்கிங் காகம்.
† வஸ்து-மதுபானம்.

கேளடாதயிலமது பீங்கானுள்ளே
கெட்டியாய்த்தானிறங்கு மென்னசொல்வேன்
கேளடாவாராம லப்பால்வாங்கிக்
கொடியதொருவீரமது பலமேலாட்டு
நாளடாகொடிரவியில்வைத்துநீயும்
நான்மூன்றுங்கடந்தபின் யெடுத்துக்கொண்டு
சூளடாவயிரவனைத் தியானஞ்செய்து
சொல்லுவேன்மதிதனிலே தடவிப்போடே. 242

போடவேமாற்றென்ன பத்தரையுமாகும
போக்கோடேயிரும்புமுதற் பழுக்கும்பாரு
தேடவேபணமிடைதான் பனவெல்லத்திற்
றின்னுவிடுகாயசித்தி யென்னசொல்வேன்
நாடவேமண்டலத்தி னரையுமாகும்
நாதாக்கள்பலதோறும் வைத்தார்பாரு
ஓடவேகெவுனமது சென்றுயானு
லூறிவருந்தயிலமதைக் காணலாமே. 243

காணலாஞ்சித்தருட மறைப்பையெல்லாங்
கடிசானகெவுனமாங் குளிகையாலே
தோணலாமந்திடத்தில் செல்லும்போது
தொண்டுபண்ணுநீயவரைக் காக்கவேணும்
மூணலாமுன்மனதை யந்திடத்தி
லூறிவைத்துதவத்தினி லிருந்தாயானாற்
பூணலாஞ்சித்தர்வந்து தொந்தமாகிப்
போக்கோடேயுதகமதை யீவார்பாரே. 244

ஈயவேவாங்கிவந்து காயசித்தி
யிதமானபோக்குணக்குஞ் சொல்லுவார்கட்
டோயவேசித்தராற் சொல்லவேணும்
தொண்டுபண்ணிநின்றவரை வணங்கவேணும்
மாயவேவேண்டாம்நீ யென்றுசொல்லி
மைந்தனேயைந்நூற்றில் வாறுசொன்னேன்
சாயவேதயிலமொன்று விதற்குப்பேரு
தப்பாதுதகமென்றுஞ் சாற்றலாமே. 245

இலிங்கக்கட்டு-மெழுகு.

சாற்றவேதயிலமதை யெடுத்துக்கொண்டு
தப்பாமலிங்கத்துக் கங்கிபூட்டி
ஆற்றவேகறிபோட்டில் வாட்டுவாட்டு
அப்பனேமெழுகாகுங் கட்டிப்போகும்

வாத்தவேவெள்ளிசெம்பி லீந்தாயானுன்
மாற்றென்னபத்தரை மாற்றுகாணுந்
தாத்தவேசரக்குகளிற் றேய்த்துப்போடு
சாருண்டுவெகுமெழுகாக் கட்டுந்தாதே. 246

## தாளக்கட்டுத்தைலம்.

கட்டவேசொல்லுகிறே னின்னங்கேளு
கருவானதாளகத்தின் தயிலந்தன்னை
கொட்டவேமுன்சரக்குப பலமும்பத்து
குமரவேசுத்திசெய்து சொல்லக்கேளு
ஆட்டவேகெவுரியுடன் வீரம்பூர
மப்பனேரசமுடனே வெடியுமொன்று
ஒட்டவேபன்றியுட கொழுப்பைவாங்கி
யுறுதிபெறத்தானரைப்பா யொன்றாய்த்தானே. 247

ஒன்றானபலமொன்று வகையதொன்று
ஒக்கவேகல்வமதிற் கூடப்போட்டு
பன்றியின்கொழுப்பதனு லாட்டிக்கொண்டு
பக்குவமாய்ச்சாமமது நாலுந்தானும்
வென்றானவில்லையது சிறுசாய்த்தட்டி
விதமாகரவிதனிலே சாமம்வைத்து
குன்றானகலசமதில் வில்லைவைத்துக்
கூழுவேன்தனைமேலே பூசீற்போடே. 248

போட்டுமேகலசமாய் சீலைசெய்து
புகழ்பெறவேதார்தனிலே மலர்தான்போடு
ஊட்டுமேவஞ்சுதமர் சவுக்கமாக
வுத்தமனேதாளிட்டு சலாக்கைவைத்து
நீட்டுமேகுழிதனையு மிருசாண்மட்டும்
நினைவாகத்தான்கிண்டி சேறுசெய்து
மூட்டுமேயதினுள்ளே பீங்கான்வைத்து
முன்குளியின்வாய்தனிலே கலசம்வையே 249

வையப்பாபீங்கானில் வாயில்நின்று
வட்டமாய்மண்ணைதனுல் மூடிபோலே
மெய்யப்பாசொல்லிவைத்தே னின்னங்கேளு
வெண்மையாய்நாகசரங் கட்டைபோலே
பொய்யப்பாசொல்லவில்லை குழாய்போற்செய்து
பூட்டாதமர்துகளை வாய்க்குந்தன்னிற்
செய்யப்பாசீலைமண் வலுவாய்ச்செய்து
தீர்க்கமாயேழுமண்ணுந் திரமாய்ச்செய்யே. 250

திரமாகச்செய்தபின்பு கலசந்தன்னைத்
தீர்க்கமாய்த்தாறுமட்டு மட்டமாக்கி
உரமாகமணற்பரப்பி யதின்மேலசேறு
வுலைபொருந்தவாய்வளைய மோட்டைவைத்து
தரமாகயதைச்சுற்றிக் கவிழ்த்தாய்போலே
தார்கலையவதைமூடிக் கரியைக்கொட்டி
உரமாகக்கரிமேலே விராட்டியிட்டு
வுத்தமனேதீயிட்டுத் தியானஞ்செய்யே. 251

செய்யவேவைரவர் தியானத்தோடு
தீர்க்கமாய்ச்சத்தியையும் பூசைசெய்து
வெய்யவேயிவர்களுட தியானத்தாலே
வெருண்டெழுந்தத்தைல மிறங்கும்பாரு
நைய்யவேசரக்கெல்லாங் கரைந்துபொங்கி
நாகத்தின்வழியிறங்கித் தைலநிற்கும்
பொய்யென்றுபூசையைநீ மறந்தாயானால்
போக்கோடேதைலமது மிறங்காதெண்ணே. 252

எண்ணவேதைல மிறங்குமட்டு
மென்தாயார்பூசையைநீ மறந்திடாமற்
கண்ணவேவைரவர்கள் நெஞ்சில்வைத்து
கண்மூக்குமத்தியிலே கருத்தையூணி
பண்ணவேதியானத்தால் தைலந்தானும்
பார்க்கவேபீங்கானி லிறங்கிநிற்கும்
தண்ணவேதைலமதை யப்பால்வாங்கி
தானிடுவாய்வீரமதில் பலந்தானென்றே. 253

ஒன்றானவீரமதைப் பொடித்துவிட்டு
வுத்தமனேரவிதனிலே யொருநாள்வைத்து
குன்றானபீங்கானிற் பதனம்பண்ணிக்
கொட்டுவாய்ரேக்கதனைப் பலந்தானென்று
தன்றானசொர்னமென்ற ரேக்கையுந்தான்
தீர்க்கமாய்த்தோய்த்துவிடக் கலந்துபோகும்
பன்றானதைலமடா யென்னசொல்வேன்
பராபரியாள்நாதமென்று பேருமாச்சே. 254

போரானதயிலமதைச் சித்தரெல்லாம்
பேசியேயொளித்தார்க ளெல்லாருந்தாம்
காரானகயிலாசச் சட்டைநாதர்
கட்டினார்தீக்ஷைவிதி யிருநூற்றுக்குள்

நேரானபுசண்டருட கிருபையாலே
நேர்த்தியாயிதைத்தெளிந் தைன்னூற்சொன்னேன்
வாரானதைலத்தின் பெருமைதன்னை
வசனித்தேனின்னமுந்தான் வகையைக்கேளே. 255

கேளடாதைலமதை மண்டலந்தான்
கிருபைபெற்றுக்கொண்டிடவே காயசித்தி
கோளடாவாராது நரையும்போகுங்
கொடியதொருதிரைகளெல்லாம் வாங்கும்பாரு
பாளடாபோகாது நரம்பையெல்லாம்
பம்பரம்போலாக விறுக்கிக்கொள்ளும்
வாளடாநமனுக்கு நமனாய்நின்று
வாழ்ந்திடுவாய் 0 கற்பாந்தகாலந்தானே. 256

தானென்றதைலமதை வெள்ளிற்செம்பிற்
றடவியேபுடம்போடப் புடத்திலேதான்
வானென்றமாற்றென்ன பத்துமாகு
மைந்தனேயிரும்புமுதற் பழுக்கும்பாரு
கோனென்றசரக்குகளு மெழுகுமாகுங்
கூறுவேன்கட்டினதுமிதும்வயாகும்
ஊனென்றதைலங்கள் செய்யும்போது
ஒழுங்காகவிம்முறைகள் செய்துகொள்ளே. 257

கொள்ளவேவாதமுறை கருக்கெல்லாங்
கூறுவேனிருநூற் றைம்பதுக்குள்
அள்ளவேமுப்பூவின் மார்க்கஞ்சொன்னேன்
அனேகமாங்குறுக்குவழி பரிசீனமுஞ்சொன்னேன்
மெள்ளவே () பூவெடுக்க விவரஞ்சொன்னேன்
வேதாந்தமெய்ஞ்ஞானமணியாம் பூசைசொன்னேன்
கள்ளமேவாராது இன்னங்கேளு
கருவானசரக்குவைப்பு காட்டுறேனே. 358

துருசுவைப்பு.

காட்டுவேன்வாதத்தி லாதியென்ன
கருவானதுருசுனுடவைப்புகேளுஞ்
சூட்டுவேன் 0 சீனமதுபலந்தானு
துப்பறவாம்வெடியுப்பு பலந்தானு

---

* கற்பகாலம்-கோடியுகம்.
() பூஇஃது-முதற்குறைமுப்பு
0 சீனம்-படிகாரம்.

கூட்டுவாய்க்கல்லுப்பு சேர்தானெட்டு
குமறவேபொடிபண்ணிச் சொல்லக்கேளும்
பூட்டுவேன்செம்பானை பாண்டந்தன்னிற்
பொடித்திட்டுப்பழச்சாறுந் தயிரும்வாரே.

வார்த்துமேபழச்சாறு படிதான் 0 ரண்டு
மைந்தனே 0 கரிமேதைத் தயிர்தானென்று
பார்த்துமேசலகிட்டுச் சீலைமண்செய்து
பக்குவமாயரையளவு குழிதான்வெட்டி
கார்த்துமேயோட்டைத்தி குதிரைலத்தி
கவியவேதான்மூடி மணலுங்கொட்டி
தூர்த்துமேன்மூடிவிட் டாறுதிங்கட்
டொச்சமறக்களந்தபின்பு சொல்லக்கேளே.

சொல்லுவேன் துருசென்ற பேருமாச்சு
சொற்பெரியமூலரென்று பேருமாச்சு
வெல்லுவேன்வாதவித்தை தனக்கேயாதி
வேதாந்தசாரமென்று மிதற்கேபாரு
கொல்லுவேன்சூதத்தை யென்றுநின்று
குடோரமுள்ளமதயானைக் கோவிக்கோவி
மில்லுவேன்சரக்குகளைத் தலைதூக்காமல்
மீரடங்கக்கட்டுகிற குருவுமாமே.

வீரவைப்புத்திரர்வகம்.

குருவானவீரத்தின் வைப்புக்கேளு
கூறுவேன்வெடியுப்பு சேர்தானஞ்சு
உருவானசீனமது சேர்தானாறு
வுத்தமனேயிதிற்பாதி பொடித்துப்போடு
கருவானதிவையெல்லாங் கல்வத்திட்டு
கடுகவரை [] மேனியென்றசாற்றினாலே
திருவானரவிதனிலே காயபோட்டு
சீர்பெறவேபொடியாக்கிப்பானைக்கேற்றே.

எற்றியே ? வாலுகையின்மேலேவைத்து
என்னசொல்வேன்சக்கரமாம் வாலைதன்னை
போற்றியேபாண்டத்திற் கவிழ்த்துநீயும்
புகழ்பெறவேசீலைமண் வலுவாய்ச்செய்து

---

* ரண்டு-வடமொழி.
0 கரிமேதை-கருப்பெருமை.
[] மேனி-குப்பைமேனி.
? வாலுகை-அடுப்பு.

உரோமரிஷி - நூா.

ஆற்றியே மண்ணாலே குழாவைப்பண்ணி
அப்பனே வாலையுட் மூக்கிற்சேர்த்து
வாத்தியே யென்றாயைப் பூசைபண்ணி
மைந்தனே பனலையிட்டுத் தீநீர்வாங்கே.

* வாலை-திராவமிறக்குகிறகுழா யாயுள்ளபாண்டம்

வாங்கையிலே சுத்தவெள்ளி வருகும்பாரு
மார்க்கமாய்வீசிவிட்டப்பால்...
காங்கையிலே யதிகமானல்நீர்ச்சிவந்து
கடகடவென்றேயிறங்கும் பின்கானுள்ளே
தாங்கையிலேயிவையெல்லாங் குடத்தில்வாங்கே
சார்வாகவைத்தபின்பு சொல்லக்கேளு
தூங்கையிலே கண்டதொரு சகுனம்போலச்
சொற்பனமாயென்னாதே யின்னங்கேளே.

கேளடா குருமதுசேர்த்தானென்று
செடியெ, வேயெட்டில்வைத் திராவகத்தைக்குத்தி
குளடா நெருப்பில்வைத்து வறுக்கும்போது
துப்பறவாய்மாவைப்போலாகும்பாரு
கோளடா வாராமற்சினமூன்று
கொடியதொரு வெடியுப்புபலமூன்று
வேளடா வெரிந்தசிவன் பூநீற்காலும்
|| வெள்ளையென்றபாஷாணம் பலமிரண்டே.

ரெண்டான வுப்பதனை வறுத்துப்போடு
நேரான சாரமது பலந்தானொன்று
தண்டான துருசுதுவும் பலந்தான்ரெண்டு
தான்வறுத்துப்போட்டுவிட் டின்னங்கேளு
தெண்டான வன்னமென்ற பேதிதானுஞ்
சேர்க்கவே சொல்லுகிறேன் பலமிரண்டு
குண்டானதிவையெல்லாஞ் சூதத்தாளிற்
கொட்டியே தாவகலக்கிக் குப்பிக்கேற்றே.

ஏற்றியே வாலுகையின் மேலேவைத்து
யென்னசொல்வேன் கமலம்போற் றீயைமூட்டு
போற்றியே செந்தூரம் வைத்தாப்போலப்
போக்கோடே மண்ணளவு முருகுமட்டு

* தீநீர்-திராவகம்.
|| வெள்ளைபாஷாணம்-சங்குபாஷம்.

மாற்றியேமுச்சாமந் தீயைப்போடு
மப்பனேயடுப்பேற்றி மறுநாள்மூட்டு
தூற்றியேநாலாநாட் பனிரண்டுசாமந்
தப்பறவாய்த்தீமூட்டியப்பால்வாங்கே. 167

வாங்குவதுகுளிரநனருயாறவிட்டு
வாகுபெறவடுப்பைவிட்டிறக்கிமேயும்
தாங்குவதுபோலேநீ [] குப்பிதன்னைத்
தானுடைத்துப்பார்த்திடவேயென்னசொல்வேன்
பாங்குபெறதேங்காய்போலிருக்கும்பாரு
பருவமாய்த்தானுதிர்த்துப் பலந்தானெட்டு
ஏங்குவதுபோலேநீ யெண்ணிடாதே
யிதயாகச்சேர்க்கும்வகை யினிமேற்கேளே. 268

இனியதொருசரக்குவகை யின்னங்கேளு
இயல்பானகல்லுப்புப் பலந்தானாறு
கனியதொருபூநீறு பலந்தான்ரண்டு
கண்டரென்றதொருசுகான் பலமும்நாலு
வனியனெனுஞ்சீனமது சொல்லக்கேளு
மைந்தனேபலமதுதா னென்றரையுமாகும்
பிணியனென்றுநோய்களுஞ் சாரந்தானும்
போக்கோடேபலமரைதான் புகழாய்க்கூட்டே. 269

கூட்டவேவெடியுப்பு பலந்தான்கேளு
குறையாமலொன்றரையாம் பலமேதூக்கி
வாட்டவேயிவையெல்லாங் கல்வத்திட்டு
வப்பனேதொருசுப்பு வறுத்துப்போடு
காட்டவேயொன்றுமில்லை திராவகத்தினாலே
கனக்கவேயறையாதே மந்தித்தப்பா
ஊட்டவேசிறுதனலில் வறுத்துக்கொண்டு
உத்தமனேகுப்பிதனி லடைத்திடாயே. 270

அடைத்துமேயரைவாசி மட்டும்போட்டு
அப்பனேவாலுகையில் முன்போல்வைத்து;
படைத்துமேமுச்சாமந் தீயைப்போட்டு
பருவமாய்ராக்கால மாறப்போட்டு
விடைத்துமேநாலாநாட் தீயைப்போடு
விபரமுடன்பனிரண்டுசாமமாகு
முடைத்துமேஐந்தாநாட்டன்னினீயு
முற்றுநீபார்த்திடவே வீரந்தானே. 271

[] குப்பி-அரக்குபுட்டி.

தானென்றவீரமதை யென்னசொல்வேன்
　சதாசிவனார்நெற்றிக்கண் தானேயாகுங்
கோனென்றவீரம்விட்டால் வாதம்போச்சு
　கொடியதொருசுண்ணமையா விதனிற்கோடி
தேனென்றபரங்கிவைப்பு தீர்க்கமில்லை
　திரும்பவதைமடித்துவைத்தாற்றிறமதாகும்
ஊனென்றவீரத்தின் போக்கைச்சொன்னேன்
　உத்தமனேயத்தொழிலு மிதுதானாமே. 272

ஆகுமேமற்றமற்ற வீரமெல்லாம்
　அப்பனேவைத்தியத்துக் காகும்பாரு
மேகுமேயிந்தமுறை வீரந்தானும்
　போக்கோடேயத்தொழிலுஞ் செய்யலாகும்
வேகுமேயிவ்வீரச் சுண்ணமானால்
　வெகுசூறுக்குவாதமுறை கைக்குள்ளாகுஞ்
சாகுமேசரக்கெல்லாஞ் சுண்ணமாகுந்
　தனித்துநின்றபூரத்தின் வைப்புகேளே. 273

பூரவைப்பு,

கேளடாசூடனது பலந்தானொன்று
　கெட்டியாய்ப்பூநீறு பலமதொன்றும்
நாளடாவெடியுப்புக் கழஞ்சிரண்டும்
　நாட்டுவாய்கல்லுப்பு கழஞ்சுயொன்று
சூளடாசாரமது கழஞ்சிவொன்று
　துப்பறவாய்வெண்காரங் கழஞ்சியொன்று
கேளடாவாராமற் கல்வந்தன்னில்
　கொட்டியேதானரைக்கக் கூறுவேனே. 274

கூறுவேன்கல்லுப்பைவழுத்துப்போட்டுக்
　கொடியதொருசரக்கையெல்லாஞ் சுகமாய்ப்போடு
ஆறவேபசுவினெய் யதிலேகொஞ்சம்
　அப்பனேவிட்டுநீ ரவியிற்போடு
ஊறவேசாமமது சென்றபின்பு
　உத்தமனேசூடனது பொங்கிநிற்குந்
தேறவேபதமென்று மறுகால்நீயுந்
　தீர்க்கமாஞ்சூடனதிற் கழஞ்சிபோடே. 275

போட்டுபுழுகதிலே கழஞ்சிகூட்டிப்
　பொங்காமல்நெய்யைவிட்டு மறுகாலாட்டு
ஊட்டுமேயுறுதியா யாட்டிக்கொண்டு
　உத்தமனேசாமமது சென்றபின்பு

நாட்டுமேகாசியென்றமேருக்கேற்றி
நாதாந்தசத்தியைநீபூசைபண்ணி
தேட்டுமேயிதைவிட்டாற்றேட்டமுண்டோ
சிவசிவாதாளிதனில்மணலைக்கொட்டே.

கொட்டியேநாலுவிரற்கனந்தானப்பா
கூறுவேன்கல்லுப்பைப்பொடியாய்ப்பண்ணி
ஊட்டியேநெற்கனமாயதின்மேலிட்டு
உறுதிபெறக்குப்பிதனைநடுவில்வைத்து
கட்டியேமணலையதின்கழுத்துமட்டுங்
கனக்கவேசொப்பணிட்டுசொல்லக்கேளி
பட்டியாத்திரியாதெகுப்பிவாயை
பழக்கமாய்த்திரித்துநீவைத்திடாயே.

வைத்திட்டுவாலுகையிற்றீபம்போல
மைந்தனே () கடிகையதுசென்றபின்பு
பொய்த்திட்டுப்போகாதுபுகைமேற்செல்லும்
பொருமியேகுப்பிவாயுடைத்துப்போகுங்
கைத்திட்டமாகவேதான்கமலத்தீயாய்க்
கவனமாய்ப்போட்டுவிடுசாமமூன்று
மெய்த்திட்டமாகவேதான்னல்தான்மீறி
வெடித்துவிடுங்குப்பிரியதுவீழ்வாய்ப்போமே.

போகாமற்பத்திரமாயிந்துக்கொண்டு
பூரணியைமனதில்வைத்துதியானஞ்செய்து
ஏகாமற்சரக்குகளைப்பார்த்துகொண்டு
என்மக்காள்கவனமதாயிருந்துகொண்டு
சாகாமனின்றதொருதலையுமாகுஞ்
தண்ணுமடாசரக்குகளையிந்தபுரம்
வேகாமற்சரக்குகளைவேகவைக்கும்
வெகுசுருக்குச்சுண்ணத்துக்காதியாமே. 279

ஆதியாங்குப்பிதனையாறப்போடு
அப்பனேயுடைத்துபார்பூரந்தானுஞ்
சோதியாமிளந்தேங்காய்போலநிற்குஞ்
சொல்லுவேனிதன்பெருமைசுண்ணத்தாதி
வாதிகளேயிதையெடுத்துவைத்துக்கொண்டு
மகத்தானசரக்குகளைச்சுண்ணம்பண்ணு
பாதியாய்நின்றதொரு () மதியைச்சூடும்
பரனெனக்குச்சொன்னவித்தைபார்த்தோநாமே. 280

() கடிகை-நாழிகை
() மதி-சந்திரன்

## குடோரிவைப்பு.

பார்த்துமேசொல்லுகிறேன் * குடோரியொன்று
படிகபாய்வெடியுப்புநாவாங்காச்சற்
சேர்த்துவெண்காரம்பூநீற்குதங்
திறவான 0 வெள்ளையொடுதாளகமுஞ்சாரம்
வார்வதுமேகல்லுப்புவகையொன்றுக்கு
வப்பனேபலமதுதானுங்கூட்டி
ஏர்த்துமேகல்லுப்பைவறுத்துப்போடு
இதமானரேக்கதிலேகழஞ்சுகூட்டே. 281

கூட்டவேவீரமதிற்கழஞ்சிக்கூட்டிக்
கொட்டியேயிவையெல்லாங்கல்வத்துள்ளே
நாட்டவேயெருக்கன்பாற்றன்னைவிட்டு
நலமாகவரைத்துவிடுசாமம்நாலு
ஆட்டவேவெருக்கனுடபழுப்பின்சாற்றால்
அரைக்கவேநாலுசாமமரைத்தபின்பு
வாட்டவேரவிதனிலேஉலரவைத்து
மைந்தனேகாசியென்றமேருக்கேற்றே. 282

ஏற்றவேவாலுகையின்மேலேவைத்து
என்னசொல்வேன்தீயைவிடுகமலம்போலே
போற்றியேபன்னிரண்டுசாமமாறு
பொருந்திநின்றபதமொன்றுநெளிப்பையாற்றி
மாற்றியேகுப்பிதன்னையப்பால்வாங்கி
மைந்தனேயுடைத்துப்பார்தேங்காய்ப்போலாம்
ஆற்றியேமஞ்சளுடரேக்கைப்பற்றி
யதிலிருக்குங்குடோரியைநீ யெடுத்துவையே. 283

எடுத்துநின்றகுடோரிதன்னைவாத்தான்முன்னே
இதமாசவைத்துநீபூசைபண்ணே
தொடுத்ததொருசரக்குகளைக்கரைத்துநீறுய்ச்
சோதிபெறசக்திலதாய்ச்சவுலையாடு
மடுத்ததொருகுடோரிசென்றகாரமாகு
யப்பனேயிதன்பெருமையாருஞ்சொல்லார்
விடுத்ததொருசரக்கிதுதானுருக்கினத்துக்காதி
விபரமிதிற்சொல்லிவைத்தேன்விளம்பக்கேளே. 284

---

* குடோரி-கொடோரிபாஷாணம்
0 வெள்ளை-சங்குபாஷாணம்

## சூடன்வைப்பு.

கேளடா || சூடனுடவைப்புதானுங்
கீர்த்தியாய்ச்சித்தர் சொல்லவேயான்
நாளடாவாழையைத்தான்வெட்டிப்போட்டு
நலமாக்கிழங்குதனைக்குடைந்துவைத்தாற்
சாளடாமறுநாட்டானுற்றுப்பாரு
சலமதுதான் னிறப்பிநிற்குமெடுத்துக்கொண்டு
வாளடாபடிதானுமிருபதாகு
மைந்தனேயெடுத்துநீபாண்டத்துாத்தே. 285

ஊத்தடாசெப்பினுடபாண்டந்தன்னி
லுத்தமனேவெடியுப்புஜந்தாங்காச்சல்
சேத்தடாவுப்பதுதான்மிறிக்கக்கேளுந்
திறமையாயுப்புத்தான்பாண்டத்திட்டு
வாத்தடாகாடியதுயமூங்கவிட்டு
மைந்தனேருங்கிலியம்பத்துக்கொன்று
பாத்தடாவெள்ளையாயெடுத்துக்கொண்டு
பக்குவமாயுருக்கியதிலிட்டிடாயே. 286

இட்டுமேயடுப்பிலிட்டுக்காய்ச்சும்போது
இதமாகக்குழம்பதுபோற்பதத்தைப்பார்த்து
தொட்டுமேயெனுமிச்சம்பழத்தின்சார்
சுருக்கிடவேகுத்திநீகாய்ச்சும்போது
கட்டுமேஉலையதனிற்கருதிப்பாரு
கனக்கவேயுரைந்துவிடும்பதமென்றேதாம்
போட்டுமேபுதுசட்டிதன்னிலேதான்
புகழ்பெறவேயூற்றிவிடுயுப்யுநீரே. 287

நீரிட்டசட்டியைத்தான்மூடிப்போடு
நிறைந்துமேமூன்றுநாளானபின்பு
காரிட்டவுப்பதுதானென்னசொல்வேன்
கம்பியென்றால்பெருங்கம்பியாகும்பாரு
சீரிட்டவுப்பதனைக்காயப்போடு
தீர்க்கமாயெட்டுசேர்நிறுத்துக்கொண்டு
வாரிட்டவாழையுடஜலத்திலேதான்
மைந்தனேகலக்கிவிடுவகையிதாமே. 288

வகையானதொன்றுமில்லைபாண்டந்தன்னை
மைந்தனேயடுப்பில்வைத்துகாய்ச்சும்போது

---

|| சூடன் கருப்பூரம்.

இகையானகருவாப் பட்டைதன்னை
  யிதமதாகத்தானெடுப்பாய் வீசையொன்று
துகையானவிதையிடித்துப்பாண்டத்திட்டு
  துப்பறவாய்க்காடியதுதுணியிட்டு
பகையில்லாவெல்லமொடாபணையின்வெல்லம்
  பாங்குடனேசேரிரண்டுபார்த்துப்போடே. 289

போட்டுமேகலக்கிநீயூரப்போட்டு
  போக்கோடேமத்தைவிட்டுக்கிண்டும்போது
ஊடுமேகையிடையிற்சிறிய தானால்
  உத்தமனேமறுபாண்டம்தன்னிலூற்றி
காட்டுமேயடுப்பிலிட்டுப்பானைமூடி
  கவிழ்த்தியேகுழையிலிட்டுவாங்குவாங்கு
தீட்டுமேதிராவகம்போலிறங்கும்பாரு
  திறமானபீங்கானிற்பதனம்பண்ணே. 290

பண்ணவேமுன்னுரைத்தவாயைநீர்தான்
  பற்றியேவருகையிலேதிராவகத்தைவாரு
எண்ணவேபடிரண்டுகூடவாரு
  யிதமாகக்கிண்டியேமூடிப்போடு
கண்ணவேகாற்றில்லாவிடத்திலேதான்
  கனமத்தாய்மூடியடாசெல்லக்கேளு
வண்ணவேயொன்பதுநாட்கழிந்ததானால்
  வாங்குபெறத்திறந்துபார்சூடனாமே. 291

ஆகுமேயாலாத்திப்பூரமாச்சு
  அப்பனேயதைக்கட்டவாராலாகும்
போகுமேசுண்ணமென்றகட்டுக்கெல்லாம்
  போக்கோடேபாரையுப்புபண்ணினாக்கால்
எகுமேதலையென்றுமிதற்குப்பேரு
  தாகுமேயக்கினியாங்கூர்மாச்சு
சச்சிதானந்தவெளிதானேபாரே. 192

அஞ்சனபாஷாணவைப்பு.

தானென்றவஞ்சனமாம்பாஷாணத்தைச்
  சாற்றுவேன்வகைவிபரமாகக்கேளு
ஊனென்றரசமதுதான்பலமுமெட்டு
  உத்தமனேசந்தியதுபலமிரண்டு

வானென்றகெந்தகத்தையோட்டிவிட்டு
மைந்தனேவுருகையிடலரசத்தைக்கொட்டித்
தேனென்றகுச்சியினாற்கிண்டும்போது
சிவந்துமேகரியாகவிருக்கும்பாரே 293

பாரேநீரசத்தைக்கல்வத்திட்டு
பருங்கம்பிவெடியுப்புப்பலமிரண்டு
காரேநீதாளகமும்பலமுமொன்று
கருவானவாள்காட்டிமுட்டைநீரால்
வாரேநீகல்வமதிற்றிரட்டிக்கொண்டு
மைந்தனேரவியில்வைத்துப்பொடியாய்ச்செய்து
ஆரேநீவயத்தாற்குப்பிதானும்
அப்பனேலேசாயடித்திடாயே. 294

அடித்துமேயொருசிலைமெதுவாய்ச்செய்து
அதனிலேரசத்தைக்கொட்டுவாய்நீ
பிடித்துமேதாளியிலேமணலையிட்டுப்
பேசாதேகுப்பிவைத்துவாயைமூடி
அடித்துமேதிரியாதேகமலத்தீயாய்த்
தோணவேபணிரண்டுசாமந்தானுங்
கடித்துமேதோளேர்வதுபோலேதானுங்
கட்டுமடாலேசாகப்பதங்கமாமே 295

ஆகுமேகுப்பியைத்தாநப்பால்வாங்கி
அதிதனக்குநீர்தெளித்தாறப்போட்டு
போகுமேகுப்பியைநீயுடைத்துப்பாரு
பொன்போலேபதங்கமதுமேரிநிற்குந்
தாகுமேயிதன்பெருமைசொல்லக்கேள்நீ
சார்வானவஞ்சனபாஷாணந்தான்
எதுமேபாண்டமதுயிருப்புத்தொட்டி
யினதடியில்நின்றதூர்த்தம்பாரே. 296

சிங்கிவைப்பு

பாரேநீயின்னமொருதொழிலைக்கேளு
பாங்கானசிங்கியுடவைப்புதன்னை
சேரேநீகாரியஞ்சொல்லக்கேளு
திறமையாய்ப்பலமதுதானிருபதாகும்

நேரேநீகந்தகந்தான் பலமுமஞ்சு
நேரானவெடியுப்புரண்டரைப்பலந்தான்
வாரேநீதாளகமும்பலமிரண்டு
மைந்தனேவிதுவெல்லாம்பொடியாய்ப்பண்ணே. 297

பண்ணியேயியமதையோட்டி விட்டுப்
பக்குவமாயடுப்பினில்வைக்கும்போது
கண்ணேவெபொடிகளைநீதூவித்தூவிக்
கருகவேகருங்கிகிவிடியஞ்சாக
எண்ணேவெயிலையெடுத்துக்கல்வத்திட்டு
விதமாகப்பொடிப்பண்ணித்தேதாண்டிவிட்டு
சொன்னதொருமேல்மூடிச்சீலைசெய்து
துடியாகவாலுகையில்வைத்திடாயே. 298

வைத்துமேபணிரண்டுசாமந்தீயை
மைந்தனேசலம்போலெரிநேர்ப்பாகப்
பொய்த்துமேபோகாதுயப்பால்வாங்கி
பூரிப்பாய்ச்சலமதனைத்தெளித்தேயாற்றி
அய்த்துமேபேசாதேயுடைத்துப்பாரு
அப்பனேசிறுகம்பிபோலேயிற்கும்
நைத்துமேதானெடுப்பாய்மஞ்சள்வன்னம்
நாதாக்கண்மகிமையிதிலாட்டுந்தானே. 299

ஆட்டானசிங்கியைத்தான்மெழுகுபண்ணு
அப்பனேசுன்னமதுவாகச்செய்நீ
பாட்டானதொன்றுமில்லைசிங்கிவிட்டால்
பாரிக்கும்கெகுகோடிதொழில்களாகுந்
தேட்டானதொன்றுமில்லைசிங்கிவிட்டால்
சிவசிவாரசந்தனக்குவழியுமாகும்
மூட்டானதொன்றுமில்லையென்பதாய்பூசை
முதன்மையாய்ச்செலுத்திடவேசித்தியாமே. 300

கற்பம்.

சித்திக்குமின்னமொருதொழிலைக்கேளு
திறம்பெறவேசொல்லுகிறேன் கற்பந்தன்னை
முத்திக்குஞ்செங்கடுக்காய்கொண்டுவந்து
முறைமைபெறச்சிறுநீரிலூறப்போட்டு
சுத்திக்குமிதுநல்லதாகுமாகுந்
தூள்பண்ணிக்கலசமதிலடைத்துக்கொண்டு

பத்திக்கும் * வெருகடி தான்வெந்நீரிற்கொள்ளு
பருவமுடன்மண்டலங்கொண்டுதேறே. 301

* வெருகடி-பூனையடியதே மூவிரற்பிரமாணம்.

கொண்டுமேயானபின்புசொல்லக்கேளு
கூறுவேன்மிளகதனைபெரிதாய்ப்பார்த்து
தண்டுமேரவநீரிலூறப்போட்டுத்
தாக்கடாமிளகதனையஞ்சதாகப்
உண்டுமேதினந்தோறுமிந்தபாகம்
உத்தமமினயிருபதுநாளுமாகும்
பண்டுமேயைந்தாகக்குரைத்துவாநீ
பக்குவமாய்ச்சொல்லுகிறேனின்னங்கேளே. 302

கேளடாமிளகதுதான்கொள்ளும்போது
கிருபைபெற * வமுரியுடன்சேர்த்துக்கொண்டு
கேளடாவாராமலமுரிதன்னை
குறிப்பாகத்தேத்தாநின்வித்தைவிட்டு
பாளடாபோகாமலுப்புச்சுண்ணம்
பரிவாகவிராகனிடைகூடப்போட்டு
வாளடாதேய்த்துவிடுதெளிந்துபோகு
மைந்தனேகற்பத்துக்குறுதியாமே. 303

* அமுரி-மூத்திரம்.

உருதியாயிப்படியேசெய்துகொண்டு
உத்தமனேகொண்டுவாநீகாலைநேரம்
பருதியாய்காலையிலேசூரணந்தானுண்ணு
பக்குவமாய்ச்சொல்லுகிறேன்பாகங்கேளு
கருதியாய் § கரிசலைகுப்பைமேனி
கனசெருப்படைவிடைத்தலைவேரும்
அருதியாம்பொற்கொன்றை ¶ காந்தையோடு
அப்பனேதூதுவளையாகுமெண்ணே. 304

* கரிச்சாலை-கரசலாங்கண்ணி,

* காந்தை-முதற்குறைசிவகாந்தை.

எண்ணவேவல்லாரையைங்கோல்வித்து
இதமானசாதிக்காய்பத்திரியுங்கிராம்பு
சொன்னதொருசரக்கெல்லாமுலரவைத்துச்
சொற்பெரியமந்தாரைவெள்ளைப்பூவும்

அன்னமேமல்லிகைப்பூநிலப்பனையின்கிழங்கு
அப்பனேவகைபொன்றுபலமொன்றாகப்
பண்ணவேசூரணமாய்ச்செய்துகொண்டு
பாலகனேயெட்டிலொன்றாகற்கண்டைக்கூட்டே. 305

கூட்டியேவெருகடிதானெடுத்துக்கொண்டு
குலமானமுட்பன்றினெய்யதனாற்
ஆட்டியேகொண்டுவிடுமண்டலந்தானென்று
அப்பனேமாலையென்றநேரந்தன்னில்
நீட்டியேகபலையின்குளகுகற்பம்
நினைவாகக்கொண்டுவரபருவஞ்சொன்னேன்
வாட்டியேதிரேகத்திலுள்ளநீரை
வாங்கியேயிறக்கிவிடுமைந்தாபாரே. 306

பாரேநீவாதபித்தம்பிரிந்துபோகும்
பார்க்கையிலேபித்தமதுபறந்துபோகும்
காரேநீசிரசினின்றகற்பகத்தைச்சாடுங்
கனமானகோழையதுகழன்றுபோகும்
வாரேநீயமூர்தமதுபெருகியூறும்
மைந்தனேநரம்பெல்லாமிறுகும்பாரு
சேரேநீவிந்துவதுமணிபோலாகும்
திறமையாமாயத்திற்சிக்கொணாதே. 307

சிக்காமலப்புறத்தில்நின்றுகொண்டு
தினந்தோறும்வாசியுடதாரணையைப்பாரு
தாக்காமல்போகுமடாபிரபஞ்சந்தான்
தன்மையாய்ச்சொல்லிவைத்தேனிந்தநூலிற்
பார்க்காமற்கெட்டார்களநேகத்தோர்கட்
பாழானமனதையெங்குவலையொட்டாதே
சேர்க்காமல்சேர்க்குமடாசித்தரோடே
சென்றபின்புசித்தரென்றபேருமாமே. 308

பேரானரோமனுடபிள்ளையென்று
பெருமைபெற்றுக்கொண்டுநீவந்தாயானாற்
கூராகுமெந்தனுக்குக்கீர்த்தியுண்டு
கூப்பிடுவேனுன்னையுந்தான்பிள்ளையென்று
ஆராகுஞ்சித்தருடநூலைப்பார்த்து
அங்கங்கேதேறுவதயருமைமெத்த
சீராகுமென்னூலேகுருவுமாகுஞ்
சித்தருக்குமெத்தொழிலுந்திரமாய்த்தானே. 309

திறமானகற்பமொன்றுசொல்லக்கேளு
சிவசிவாருத்திரனென்றகற்பமாகும்
முறமானசீந்தியடாபெரிதாய்ப்பாரு
மோகோகோவேரையுநீயுள்ளேதோண்டி
நிறமானவேராண்டுமட்டுமாணுள்.
நேரானகணேசனைப்போற்கிழங்குதோன்றுஞ்
சலமானவாசியைநீ யுள்ளேபூட்டித்
தம்பித்தேவாலையைநீதியானம்பண்ணே. 310

பண்ணவேயென்தாயார்கிருபையாலே
பதனமாய்கிழங்குகளையெடுத்துக்கொண்டு
உண்ணவேமேற்றோலைச்சீவிப்போட்டு
வுறுதிபெறப்பாக்கதுபோற்றுண்டுபண்ணி
எண்ணவேநிழலுலர்த்தாலுலர்த்திக்கொண்டு
இடித்துமேதூளாக்கியப்பாற்கேளு
சண்ணவேயெட்டிலொன்று ¶ சீனிதானுஞ்
சரிகூட்டிரேகித்துயப்பால்வையே. 311

¶ சீனி-சருக்கரை.

வையென்றசூரணத்தையந்திசந்தி
மைந்தனேகொண்டுவரவிபரம்கேளு
பொய்யென்றுபோகாதேசீந்திற்றண்டை
போக்கோடேமேற்றோலையப்பால்வாங்கி
நையென்றுதட்டியேபலமுமொன்று
நாட்டடாபடிநீருமளந்துவிட்டு
மெய்யென்றுமனதில்வைத்துத்தியானஞ்செய்து
விரவியேயெட்டொன்றாய்க்காட்டிடாயே. 312

காய்ச்சியேதார்கியாழத்திற்சூரணத்தோடொக்க
கருதியேகொண்டுவரமண்டலந்தானப்பா
பாய்ச்சியேதார்நரைதிரைகளெல்லாம்போகும்
பக்குவமாய்க்காயசித்திக்கிதுவேயாகுந்
தாழ்ச்சியில்லைபொருளைநீகண்டாயானால்
சாவில்லையுந்தனுக்குத்தாழ்வராது
வாய்ச்சியெனுமென்தாயார்கிருபையாலே
வருண்மீறும்பொருண்மீறுமறிந்துபாரே. 213

சதுரக்கள்ளிக்கற்பம்.

பார்க்கவேசித்திக்குஞ்சாவோயில்லை
பரிபாஷைக்கருவாகச்சொன்னார்பாரு

ஏர்க்கவேயிந்தமுறை கற்பந்தன்னை
யிணக்கமாய்ச்சொல்லிவைத்தா னிடையில்லாமற்
சேர்க்கவேகற்பத்தை யுண்டபின்பு
திறமானகற்பமொன்று சொல்லக்கேளு
தீர்க்கமாமன்மதனைக் காட்டிற்றானல்
திரமானசதுரமாங் கள்ளிக்காயே. (314)

காயனதொன்றுமே பலமொன்றுக்குக்
கைத்தாழஞ்சோறு மாகுஞ்சலமூன்றுந்
தாயானகடுக்காய்தான் பலமுமொன்று
தப்பாமல்விரைப்போக்கிப் பொடித்துக்கொண்டு
சேயானகைதன்னன் பிசைந்துக்கொண்டு
திறமையாய்வடிகட்டிச் சலத்தைவாங்கி
மேயான*பேரண்டத் தெண்ணெய்தானு
முருகழஞ்சுவிட்டதிலே யிதமாய்க்கொள்ளே. (315)

0எரண்டம்-ஆமணக்கு.

கொள்ளவேமலமொதுங்கத் தள்ளிப்போடுங்
கொடுமையென்ற0 வழலையெல்லாங்கக்கும்பாரு
மெள்ளவேபால்கஞ்சி வைத்துக்கொள்ளு
மேல்நின்றபித்தமெல்லாங் கீழேசாடுங்
கள்ளமொன்றுவாராது மலங்கடன்னை
கண்டிப்பாய்க்கழுண்டுவிடுங் கருத்தாய்சொன்னேன்
பள்ளமென்றபடிகுழியில் வீழ்ந்தாயானற்
பயனறியக்காமமது கொல்லும்பாரே. (316)

0}வழலை-உப்பு.

மாரப்பாகற்பவிதி சட்டைநாதர்.
பாடிமதோர்சாஸ்திரந்தான் மெத்தநன்று
தேரப்பாவன்னாலு மின்னாலும்பார்
திறமாகுங்கற்பவிதி யுறுதிமெத்த
ஆரப்பாயெங்களைப்போல் சொல்வாரில்லை
அவரவர்களனேகவித்தை யாகச்சொன்னார்
காரப்பாகற்பங்கட் காணமாட்டார்
கருத்துவைத்துயிந்நூலைப் பாருபாரே. (317)

பார்க்கவேபத்தியத்தைச்சொல்லக்கேளு
பருவமுடன்புகையாகா புளியுமாகா
ஏர்க்கையிலேயுப்பாகா வெண்ணெயாகா
யிதமானபெண்ணோடு சுணணும்பாகா

சேர்க்கையிலேமோராகா துவற்பமாகா
தீர்க்கமாய்கடுகாகா || உள்ளியாகா
தார்க்கையிலேநித்திரையும் கோபமாகா
தனிநாட்டகுறிதனிலே சார்ந்துநில்லே. 318

* உள்ளி-வெள்ளைப்பூண்டு.

நில்லென்றாலொருமனதாய் நிற்கவேணும்
நிலையானமவுனத்தைக் காணவேணும்
வெல்லென்றால் மனதினை வெல்லவேணும்
வேதாந்தசாஸ்திரத்தைக் காணவேணும்
பல்லென்றால்ஞானவிதி கற்கவேணும்
பன்மமென்ற ரசத்தைத்தள்ளவேணும்
இல்லென்றால்வையத்தை தோய்ந்துபோகும்
இதுதனுக்குவிசைவருமோ விண்ணுள்ளோர்க்கே. 319

உள்ளபடிசொல்லுகிறேன் கற்பத்துக்கு
உறுதிபெறப்பத்தியத்தைச்சொல்லக்கேளு
கள்ளமொன்றும்வாராது பசுவினெய்யாங்
கருகியதோர்பாலாகுந் தேனுமாகும்
விள்ளவேசிறுபயறு முருங்கையாகும்
வெள்ளையென்றவழுதலைங்கா யிவைகளாகுங்
கொள்ளவேதூதுவேளை யிலையுமாகுங்
கூட்டுவாய்நெல்லிக்கா யவரக்காயே. 320

காயானபீர்க்கங்காய் பொன்னாங்கண்ணி
கருவாடுசிறுகீரை கஞ்சாவாகுந்
தாயானவெள்ளாடு காடையாகுஞ்
சாற்றுவேன்வல்லாரை முயலுமாகுங்
பாயானமானுகும் பறையுமாகும்
பக்குவமாப்பானைவெல்லவஸ்துவாகுஞ்
சேயானபிள்ளைகளா யுங்களுக்குத்
தீர்க்கமாய்ச்சொல்லிவைத்தேன்றிறமாய்த்தானே.

திறமானபத்தியத்துக் கழறுகேளு
தீர்க்கமாய்க்கருங்குருவை நெல்லுக்குத்தி
உறமானவரிசியது வரியில்லாமல்
உத்தமனேதீட்டியதை வைத்துக்கொண்டு
திறமானகையதனால் சேரவாங்கி
தீர்க்கமாய்ச்சமைத்துநீ யொருபோதுண்ணும்

பரமானபராபரத்தைப்பூசைசெய்து
பாங்காகவொருபோதுவெந்நீர்கொள்ளே. 322

கொள்ளவேபழமாகுஞ்சீனாபாகுங்
கூறுவேனிப்படிநீபத்தியத்தையுண்டு
விள்ளவேவேண்டாங்காணார்க்கானாலும்
வேதாந்தவாலையைநித்தம்பூசி
வள்ளவேஞானமென்றவமுர்தந்தன்னை
வாகாசபரவெளியிலமர்ந்துநில்லு
தெள்ளவேவேணுமடாலோகவாழ்க்கை
சச்சிதானந்தவெளிதன்னினில்லே 323

தன்னிலையைத்தானறிந்துபார்க்கவேணுஞ்
சதாநித்தியங்குருபதத்திற்சாரவேணுங்
கண்ணிலேமனக்கண்ணேபார்க்கவேணுங்
கவனத்தார்கெவுனமதிற்சொல்லவேணும்
மென்னிலையையறிந்துவருகவேணு
மென்குருவாம்புசண்டருடகிருபைவேணும்
முன்னிலைக்குகற்பமறிந்துண்ணவேணு
மூர்க்கருடன்கோபத்தைத்தள்ளுதள்ளே. 324

மூதண்டகியாழம்.

தள்ளடாகற்பமதுண்ணும்போது
சரீரத்தில்வெட்டையதுமீறிற்றாகில்
கொள்ளடா 0 மூதண்டகியாழந்தன்னை
கூறுவோமறுகன்வேர்பிடிதானென்று
விள்ளடாமிளகதுதானிருபத்தஞ்சு
விசிதமாய்ப்படிசலத்திற்கூடப்போட்டு
தள்ளடாகியாழமதாழாக்கானால்
தேவாகவெண்ணெயிட்டுக்கொண்டிடாயே. 325

0 மூதண்டக்கியாழம்-அறுகுவேர்க்கியாழம்.

தலைமுழுகத்தைலம்.

கொண்டுவிடுபோக்களவுவெண்ணெயிட்டுக்
குடிலமென்றகுதிப்பெல்லாமடங்கிப்போகுங்
கண்டுகொள்ளுந்தலைமுழுகவரிசைகேளு
கனமானமிளகுடனேகடுக்காய்நெல்லி

உண்டுகொள்ளுசாதிக்காய்மஞ்சள்வேம்பு
வுத்தமனேபருப்புடனேமஞ்சள்கூட்டி
பண்டுகொள்ளுவாவின்பாற்நன்னலாட்டி
பக்குவமாய்க்காச்சியதைமுழுகுவாயே 326

முழுகவே 0 பட்சமதுதனக்குநீயு
முறைமையுடன்வாரமதில்நெய்யுமுழ்கு
தழுகவேமாதரிடஞ்செல்லவேண்டாஞ்
சண்ணுமடாமாய்க்கையைநீதள்ளுதள்ளு
நழுகவேமாயத்திற்சென்றாயானால்
நன்றாகச்சண்ணுமடாமருந்துதானுங்
கழுகவேமனக்கசடுசுத்தியாகுங்
கன்மவினைதனைப்போக்குங்கண்டுகொள்ளே. 327

0 பட்சம்-பதினைந்துநாள்.

கண்டுகொள்ளுமிப்படியாகசித்தி
கருத்தில்வைத்துமனம்பிரக்கச்செய்தாயானால்
உண்டுகொண்டமூர்தமதையிருக்கலாகு
மொருவருஷமொருநாட்போனக்குதானு
பண்டுசெய்பாழ்வினைகளெல்லாம்போகும்
பரமகுருபாதமதைக்காணலாகுந்
திண்டுமுண்டுசெய்யாதேமகனேநீயுஞ்
சிறப்பாகபதமிலேசேர்த்துநில்லே. 328

நில்லென்றன்மனக்குரங்குநிற்கொட்டாது
நினைவணங்கிமவுனத்தியானஞ்செய்நீ
கல்லென்றாற்கறையுடாயெந்தநாளுங்
கருத்தறிந்துபாருநீகருவுந்தானுஞ்
சொல்லென்றார்கோடிக்கொன்றேயாகுஞ்
சொன்னாலுந்தெரியாவிட்டாலென்னசெய்வேன்
சொல்லென்றாற்பிரபஞ்சமுன்னைச்சொல்லுங்
கூடுதற்குமவுனத்தைகூறுவேனே. 329

கூறுமேமவுனமென்றஞானந்தன்னைக்
கூனதாற்சித்தரென்னா ளொளித்தார்பாரு
சாறுவேன்மவுனத்தைசிக்கில்லாமற்
றுணிருந்தண்டமதின்மனதைப்பூணுங்
சாறுவேன்பண்பரிசாமூலத்துள்ளே
கண்டுபாரசாரவடியனுவேயாகுஞ்
சேறுவேனென்றுசொல்லியகாரமேலே
செழுகதலவுச்சியிலேசேர்ந்துநில்லு 330

நிற்கையிலேமகாரமதுபண்ணுதுகாணும்
நினைவையதிலேகாட்டையிலேநின்மயமாய்போச்சு
சொன்னமதுசாவில்லையுறுதியாச்சு
பார்க்கையிலேயொன்றுமில்லைபிரபஞ்சந்தான்
பரவெளியிலுன்மனதைப்பதியவைத்து
பார்க்கையிலேமகாரமென்றவெழுத்தைநீயுங்
கட்டாகவுச்சிநடுமையந்தானே. 331

தானென்றஞானமதுகோடியுண்டு
சமுசியங்கடோராதுசார்வுங்காணூர்
ஊனென்றஞானங்களொன்றுமில்லை
யொளித்தார்கட்சித்தரெல்லாம்பேசிக்கொண்டு
சேனென்றவமுர்தமென்னுவிந்துவிந்து
தின்றவனேசிவயோகிசித்தன்ஞானி
வானென்றமனதையல்லோவமுர்தத்துள்ளே
வாக்கினால்சிவயோகிசுத்தனாமே. 332

சித்தனென்றுபேர்படைத்தெனூல்கள்பாரு
சிவசிவஞானவெளிதிறவுகோலார்
பத்தனென்றுனுயிர்காத்தோனவனேயோகி
பாரமலநின்றவனேயோகியாகும்
முத்தமென்றுபேர்படைத்துநின்றோனுசான்
மூர்க்கமுள்ளகோபத்தைநகடந்தவனேயோகி
வத்தமென்றவாழ்வுதனைக்கடந்தோன்ஞானி
வாகனத்தின்பொருடனையறிவிப்போமே. 333

மவுனபெருமை.

அறிவிப்பேன்வானகத்தின்வெளியிற்குள்ளே
யரனிருக்குமிடமாகுமறிந்துபாரு
தெரிவிப்பேன்வகாரமென்றவெழுத்தைநீயுந்
திறமாகச்சங்கலிப்போன்மாட்டிக்கொண்டு
நெருவிப்பேனென்றுசொல்லுமனத்தைப்பூட்டு
நேருபடும்பரவெளியும்நிமிஷத்துள்ளே
தருவிப்பேன்வமுர்தத்தைமகாரம்வைத்துச்
சங்கிலியின்வழியிழுக்கத்தருகும்பாரே. 334

தருகுமேஞானமென்றவழிக்குமப்பா
சார்வானமனமொன்றேஞானம்ஞான

முருகுமேவமனக்குரங்கைவெளிவிடாம
லாட்டடா அகாரநுனிவுச்சிமீதிற்
பெருகுமேயமுர்தமதுயென்னசொல்வேன்
பிரளுமடாகரைகடந்துவெள்ளம்போலே
வருகுமேயோகமிதன்மவுனஞான
மனம்விட்டாலொன்றுமதுவந்திடாதே.

வந்திடாதென்றுசொல்லிபலவிதந்தான்
மாட்டினார்சாத்திரங்களனேகங்கோடி
மூந்திடாதென்றுசொல்லிசொன்னதெல்லாம்
மோசமடாமனதுரிதியாகுமென்றுஞ்
சிந்திடாதென்றுசொல்லியமுர்தங்கொண்டார்
றீக்கமடாமனதுவேகுருவேயாகுங்
வெந்திடாதிடமல்லோமவுனமாகும்
வெருளாமலோரிடத்தில்நின்றுலசித்தே.

சித்தாணமனந்தன்னைசித்திசெய்ய
தீர்க்கமாய்ச்சொல்லுகிறேனின்னங்கேளு
வித்தானமனமதனையறிவினாலே
விசிதமாய்பிடித்திழுத்துயகாரத்துள்ளே
மூத்தானமகாரமென்றசங்கிலியினாலே
மூட்டோடேவரிந்துகட்டிஅகாரத்துள்ளே
சுத்தானதுடுமையங்கட்டிவைக்க
சுருதிமுடிஞானமென்றுசொல்லலாமே.

சொல்லிவிட்டேன்ஞானமெல்லாமவுனத்தாலே
சொற்பெரியவழ்வுக்குக்கிடதமாம்
வல்லியெனுந் 0 திரோதாயின்மாய்கைபோச்சு
மயக்கமென்றவழிவெல்லரமாண்டுபோச்சு
கொல்லிமலைதனிலேறியென்னசெய்ய
குடிகொடுத்தபரமதுவந்துகூடுஞ்
சல்லியமெனறெண்ணாதேஞானந்தன்னைச்
சார்ந்தாக்கலுந்தனுக்குசசாவுபோச்சே.

0 திரோதாயி பஞ்சசந்தியினென்று

## பூரணலேகியம்.

போச்சென்றுசொல்லிவைத்தேனின்னங்கேளு
போக்கோடேபூரணத்தின்லேக்கியந்தான்மைந்தா
போச்சென்றசடைகஞ்சாகொண்டுவந்து
பிசைந்தெடுத்துக்குச்சிவிரைதன்னைப்போக்கி

ஆச்சென்றுதிருநீற்றின்பச்சைதன்னை
யப்பனைகொண்டுவந்துசாறுவாங்கி
நீச்சென்றுவதைத்துவதைத்துகாயப்போடு
நீதிபெறசூரணமாய்ச்செய்துகொள்ளே. 349

கொள்ளவேசூரணத்தைப்பால்வைத்து
கூறுவேன்பாலிதுக்கின்னங்கேளு
விள்ளவேயாவின்பால்வெள்ளாட்டுப்பால்
விதமானபுங்கம்பால்பனம்பாலோடு
மெள்ளவேதேங்காய்ப்பாலத்திப்பாலும்
மேன்மையாய்வல்லாரைசீந்திற்போடு
தெள்ளவேவகையாஞ்சார்வகையொன்றுக்கு
தீர்க்கமாய்ப்படியரைதான்வீரஞ்சேரே. 340

சேர்க்கவேசொல்லுகிறேனிதையெல்லாந்தான்
திறமைபெறத்தானிலொன்றுவிட்டு
பார்க்கவேசீனியதுபலந்தான்பத்து
பக்குவமாய்ப்பனவெல்லம்பலமுமஞ்சு
கார்க்கவேயடுப்பில்வைத்து பாகாய்க்காய்ச்சி
கடைசரக்கைக்சொல்லுகிறேன்கருவாய்கேளு
ஏர்க்கவே ० திரிகடுகுதானிக்காயு
மினியதேவருகடுக்காயுங்கிராம்புமாமே. 341

० திரிகடுகு-சுக்கு-மிளகு-திப்பிலி.

ஆகுமே அதிமதுரங்கர்ப்பூரந்தானு
மக்கிராகாரமுடன் 0 கருவாப்பட்டை
போகுமேசாதிக்காய்சிறுகாகப்பூ
போஸ்தக்காய்பத்தியும்பொருந்தக்கூட்டி
வாகுபெறவேமுடல்வெட்டிவேரு
மல்லியொடுமுந்திரிகையபின்வெண்காரம்
ஏகுமேசீரகமும்விலாமிச்சோடு
யிவையெல்லாந்தானெடுத்தின்னங்கேளே. 342

0 கருவாகப்பட்டை-சன்னலவுங்கப்பட்டை.

கேளடாமாசிக்காய்பெருத்தோடு
கிருபையொடுசொல்லுகிறேன்வகையொன்றுக்கு
கேளடாவாராமற்பலங்கால்வீதங்
கொண்டுவந்துசூரணமாய்செய்துகொண்டு
வாளடாபாகத்திலேபோட்டுக்கிண்டி
மைந்தனேபடியரைதான்தேனுவிட்டு

